*1. **உப புகையிரத நிலைய அதிபர்களின் கடமை விபரம்**.- பிரவேசப்பத்திர விற்பனை நிலையத்திற்குப் பொறுப்பாக சேவையில் ஈடுபடுத்தப்படும் பிரதிநிதிகள் அந்தந்த நிலையங்களில் நிற்பாட்டப்படும் புகையிரதங்களின்படி 24 மணி நேரமும் பயணச்சீட்டு விற்பனை செய்தல் வேண்டும். பார்சல் கையேற்றல், கிடைக்கும் பார்சல்களை உரியவர்களிடம் ஒப்படைத்தல், தினமும் ஒன்றுசேரும் பணத்தை பிரதம புகையிரத கணக்கு உத்தியோகத்தருக்கு அனுப்பிவைத்தல், நிலையத்தை சுத்தமாக வைத்திருத்தல் மற்றும் புகையிரத முகாமையாளரினால் சந்தர்ப்பத்திற்கேற்ப ஒப்படைக்கப்படும் வேறு கடமைகளும் இப்பிரதிநிதிகளின் பொதுவான கடமையாகும்.*

*2. **கொடுப்பனவு**.- நிரந்தர சேவையாளர் தொகைக்கு உட்படாத பதவியாகும். தேர்ந்தெடுக்கப்படும் நபர்களுக்கு அந்தந்த நிலையத்தின் வருமானத்தை அடிப்படையாகக் கொண்டு தரகுப்பணமும் அனுமதிக்கப்பட்ட கொடுப்பனவுகள் மாத்திரம் வழங்கப்படும். மேலும் ஆரம்ப தரகுப் பணம் ரூபா 310 ஆவதுடன் (குறைந்த தரகுப் பணம் 310 ரூபாவின்படி தரகுப் பணத்தைக் கணக்கிடும்போது கிடைக்கும் முழுத் தரகுப் பணம் 10,000 ரூபாவுக்கு குறைவாயின் 10,000 ரூபாவான தரகுப் பணம் கிடைக்கும்) தரகுப் பணத்திற்கு மேலதிகமாக 5,329 ரூபாவான கொடுப்பனவும் வழங்கப்படும்.*

*3. ஆண் விண்ணப்பதாரிகளுக்கு மாத்திரமே விண்ணப்பிக்க முடியும். ஒரு விண்ணப்பதாரி தனது தூர அளவிற்கு உட்பட்ட வெற்றிடம் நிலவும் மூன்று உப புகையிரத நிலையங்களை விருப்பத்தின் வரிசைப்படி விண்ணப்பிக்க முடிவதுடன், பரீட்சையின்போது உப புகையிரத நிலையம் இரண்டிற்கு அல்லது அதற்கு மேற்பட்ட தொகைக்கு கூடிய புள்ளிகளைப் பெற்றிருப்பின் விண்ணப்பப்படிவத்தில் குறிப்பிடப்பட்டுள்ள விருப்பத்தின் வரிசைப்படி உப புகையிரத நிலையத்திற்காக நியமிப்பதற்குக் கருத்தில் கொள்ளப்படுவார். ஏதேனும் உப புகையிரத தலைமையகத்திற்காக வேண்டி தேர்ந்தெடுக்கப்பட்டதன் பின்பு விருப்பத்தை தெரிவித்த ஏனைய உப புகையிரத நிலையம் வெற்றிடமாக காணப்பட்டாலும் மீண்டும் அந்த உப புகையிரத நிலையத்தினைக் கோருவதற்கு எந்த உரிமையும் கிடையாததுடன், அந்த உப புகையிரத நிலையத்திற்கான விருப்பும் இரத்துச் செய்யப்படும்.*

*4. **வயதெல்லை**.- விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்படும் கடைசித் தினத்தன்று 18 வயதிற்குக் குறையாமலும் 45 வயதிற்குக் கூடாமலும் இருத்தல் வேண்டும்.*

5. ***கல்வித் தராதரம்***.- *க. பொ. த. (சா. தரப்) பரீட்சையில் சிங்களம்/ தமிழ்/ ஆங்கிலத்துடன் கணிதம் உட்பட சிறப்பு சித்தி நான்குடன் ஆறு விடயங்களில் ஒரே தடவையில் சித்தியடைந்திருத்தல் வேண்டும்.*

6. ***வேறு தகைமைகள்*** :

(i) *விண்ணப்பதாரி குறிப்பிட்ட உப புகையிரத நிலையத்திலிருந்து 20 கி. மீ. தூரத்திற்குள் (நேரடி தூரம்) குறைந்தது 5 வருட காலம் நிரந்தர வதிவுடையவராக இருத்தல் வேண்டும். நியமனக் கடிதம் கிடைப்பதற்கு முன்பு இதுபற்றி உறுதிப்படுத்தும் பொருட்டு நம்பத்தகுந்த கடிதங்கள் மூலம் உறுதிப்படுத்தல் வேண்டும். (கிராமசேவையாளர் சான்றிதழ், பிரதேச செயலாளரின் சான்றிதழ், தேர்தல் இடாப்பு பிரதி போன்றவையாகும்.) விண்ணப்பப்படிவத்தில் குறிப்பிடப்படும் முகவரி நிரந்தர முகவரியாக இருக்க வேண்டியதுடன் புகையிரத நிலையத்திற்குள்ள நேரடி தூரத்தை கணக்கிட வேண்டியது அம்முகவரியில் இருந்தாகும்.*

(ii) *விண்ணப்பதாரி இலங்கைப் பிரசையாக இருத்தல் வேண்டும்.*

(iii) *உயரம் 5 அடி 4 அங்குலத்திற்கு குறையாமலும், மார்பளவு 32 அங்குலத்திற்கு குறையாமலும் இருத்தல் வேண்டும்.*

(iv) *உப புகையிரத நிலைய அதிபராக தற்போது கடமை புரிபவர்களுக்கும் அல்லது அவ்வாறு சேவை செய்து சேவை முடிவுறுத்தப்பட்டவர்களுக்கும் இதற்காக வேண்டி விண்ணப்பிக்க முடியாது.*

(v) *விண்ணப்பதாரி சிறந்த தேகாரோக்கியமும் சிறந்த கண் பார்வையும் உடையவர் என வைத்திய பரிசோதனை மூலம் உறுதிப்படுத்தப்பட்டதன் பின்பே தேர்ந்தெடுக்கப்படுவர். சிறந்த கண் பார்வை உடையவராக இருப்பது கட்டாயமாகும்.*

7. ***தேர்ந்தெடுக்கப்படும் முறை***.- *புகையிரத முகாமையாளரினால் நடாத்தப்படும் எழுத்துமூல போட்டிப் பரீட்சையின் பெறுபேறுகளின் திறமையின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படுவர். போட்டிப் பரீட்சையின்போது சகல விண்ணப்பதாரிகளும் கீழ்க்குறிப்பிடப்பட்டுள்ள விடயங்களின்கீழ் இரு கேள்வித்தாள்களுக்கு விடையளித்தல் வேண்டும். பரீட்சையில் தகுதிபெறுவதற்காக வேண்டி ஒவ்வொரு விடயத்திலும் 40 வீத புள்ளிகளைப் பெறல் வேண்டும் :-*

(i) ***மொழித் தேர்ச்சி***.- *(காலம் : 1 மணித்தியாலம்) - முழுப்புள்ளி 100 ஆகும். விளங்கிக்கொள்ளுதலுடன், சரியான மொழி நடையை பிரயோகித்தல் சம்பந்தமாக விடயத்துடன் தொடர்புடைய கேள்விகளை உள்ளடக்கிய கேள்வித்தாளாகும்.*

(ii) ***நுண்ணறிவு.-*** (காலம் : 1 மணித்தியாலம்) - முழுப்புள்ளி 100 ஆகும். கேள்வித்தாளிலேயே விடை எழுதவேண்டிய கணித குளறுபாடு, மொழித் தொகுதி, அட்டவணை, பொருந்திப் பார்த்தல் குறிப்பு, படம், வரைபு போன்றவற்றின் உதவியுடன் தர்க்க ரீதியாக சரியான உடனடித் தீர்மானம் எடுக்கும் சிறந்த ஆற்றலை பரிசீலனை செய்யும் பல்தெரிவிலான கேள்வித் தாளாகும்.

***குறிப்பு.-*** (i) போட்டிப் பரீட்சையில் தகுதிபெற்றவர்கள் மத்தியில் அந்தந்த பயணச்சீட்டு விற்பனை நிலையத்தின்படி கூடிய புள்ளிகளைப் பெற்ற விண்ணப்பதாரி குறிப்பிட்ட பயணச்சீட்டு விற்பனை நிலையத்திற்கு நியமிப்பதற்காக வேண்டிய தகுதிகளை ஆராயும் பொருட்டு நேர்முகப் பரீட்சைக்கு அழைக்கப்படுவார்.

(ii) நேர்முகப் பரீட்சையின்போது புள்ளிகள் ஏதும் வழங்கப்பட மாட்டாது.

(iii) தகுதிபெற்றவர்கள் சமமான புள்ளிகளைப் பெற்றிருப்பின் அவ்வாறான சந்தர்ப்பத்தில் புகையிரத பயணச்சீட்டு விற்பனை முகவரிடம் அல்லது உப புகையிரத நிலைய அதிபரின் கீழ் அனுமதிக்கப்பட்ட பதிலீட்டாளராக சேவை செய்துள்ள விண்ணப்பதாரிக்கு முதலிடம் வழங்கப்படும். அவ்வாறில்லாவிடின் குறிப்பிட்ட உப புகையிரத நிலையத்திலிருந்து மிகவும் கிட்டிய தூரத்தில் வசிப்பவர் தேர்ந்தெடுக்கப்படுவர்.

(iv) இவ்வறிவித்தலில் உள்ளடக்கப்படாத ஏதேனும் விடயம் சம்பந்தமாக இறுதித் தீர்மானம் எடுக்கும் அதிகாரம் புகையிரத முகாமையாளருக்கு உள்ளது.

(v) இவ்வறிவித்தலில் சிங்கள மொழி மற்றும் தமிழ் மொழிகளுக்கிடையில் ஏதேனும் பொருந்தாத தன்மை காணப்படின் அவ்வாறான சந்தர்ப்பத்தில் சிங்கள மொழி மூல அறிவித்தல் சரியானதெனக் கருதப்படும்.

8. **சேவையில் ஈடுபடுத்தும் நிபந்தனை :**

(i) தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் புகையிரத முகாமையாளரினால் தீர்மானிக்கும்படி அல்லது குறைந்தது ரூபா 25,000 ஆன தொகை பாதுகாப்பு பிணைப்பணமாக புகையிரத முகாமையாளரின் பெயருக்கு வைப்புச் செய்யப்படல் வேண்டியதுடன் புகையிரத முகாமையாளருடன் கையொப்பமிடும் ஒப்பந்தத்தின் நிபந்தனைகளின்படியும் கடமை மேற்கொள்ளல் வேண்டும். அவ் ஒப்பந்தத்தின் நிபந்தனைகளை மீறுதல் சேவையை முடிவுறுத்துவதற்கு காரணமாக அமையும்.

(ii) இது ஒப்பந்த அடிப்படையிலாவதுடன் வருடத்திற்கு வருடம் இவ்வொப்பந்தம் புதுப்பிக்கப்படல் வேண்டும். அவ்வாறு புதுப்பிக்கப்படாதவிடத்து ஒப்பந்தம் முடிவுபெறும்.

(iii) தேர்ந்தெடுக்கப்படும் விண்ணப்பதாரி தான் நியமிக்கப்படவுள்ள நிலையத்தின் கடமைகள் பற்றி தெரிந்துகொள்வதற்காக வேண்டி புகையிரத முகாமையாளரினால் கூறப்படும் புகையிரத நிலையத்தில் 14 நாட்கள் பயிற்சியைப் பெறல் வேண்டும். இப்பயிற்சிக் காலத்தில் கொடுப்பனவுகள் ஏதும் வழங்கப்பட மாட்டாது.

(iv) தனக்குப் பதிலாக உதவிக்காக வேலை செய்வதற்கு புகையிரத திணைக்களத்தின் அனுமதியுடன் உதவியாளர் ஒருவரை அனுமதித்துக்கொள்ள முடிவதுடன் உதவியாளருக்காக எவ்வித கொடுப்பனவும் திணைக்களத்தினால் வழங்கப்பட மாட்டாது. நிலையத்தின் முழுப்பொறுப்பும் உப புகையிரத நிலைய அதிபரையே சாரும்.

(v) பயிற்சியைப் பெறும் காலவெல்லைக்குள் அல்லது உப புகையிரத நிலைய அதிபராக கடமையாற்றும் காலவெல்லைக் குள் அல்லது நேர்முகப் பரீட்சையின்போது அல்லது வேறு ஏதேனும் சந்தர்ப்பத்தில் விண்ணப்பதாரியினால்/அவருக் காக தரப்பட்டுள்ள/வழங்கப்பட்டுள்ள தகவல்கள் பிழையானதெனவும் அங்கீகாரம் அற்றதெனவும் தெரியவருமிடத்து எவ் அறிவித்தலுமின்றியும் நஷ்டஈடுகள் எதுவுமின்றியும் உடனடியாக அவரின் சேவையைப் பெறல் முடிவுறுத்தப்படும்.

(vi) உப புகையிரத நிலைய அதிபராக தேர்ந்தெடுக்கப்படுபவர் அத்தேர்ந்தெடுப்பு மூலம் புகையிரத திணைக்களத்தில் எந்த நிரந்தர பதவியையும் வழங்குவதற்குத் திணைக்களம் பொறுப்புடையதல்ல.

9. **சேவை நிபந்தனை.-** (i) கையொப்பமிடும் ஒப்பந்தத்தில் ஏதேனும் நிபந்தனை ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நிபந்தனைகள் மீறப்படும் சந்தர்ப்பத்தில் அவரின் நியமனம் முடிவுறுத்தப்படும்.

(ii) புகையிரத முகாமையாளரினால் காலத்திற்கு காலம் இடப்படும் நிபந்தனைகளுக்கும் ஏற்பாடுகளுக்கும் கீழ்ப்படிவதற்கு இணங்குதல் வேண்டும்.

*10. **பரீட்சைக் கட்டணம்**.- சகல விண்ணப்பதாரிகளும் மீண்டும் வழங்கப்படாத ரூபா 500 ஆன தொகை பரீட்சைக் கட்டணமாக புகையிரத பொது முகாமையாளர் எனும் பெயருக்கு மக்கள் வங்கி கணக்கு இலக்கம் 176-1-001-29027313 இற்கு வரவு வைத்துப் பெற்றுக்கொண்ட பற்றுச்சீட்டை விண்ணப்பப்பத்திரத்துடன் இணைத்து அனுப்புதல் வேண்டும். வேறு விதங்களில் பரீட்சைக் கட்டணம் செலுத்துதல் விண்ணப்பப்படிவம் நிராகரிக்கப்படுவதற்கு காரணமாக அமையும். பூரணமற்றதும், முறையற்றதுமான விண்ணப்பப்படிவங்கள் யாவும் எவ்வித அறிவித்தலுமின்றி நிராகரிக்கப்படும். பரீட்சைக்குத் தோற்றும் விண்ணப்பதாரிகள் பரீட்சை மண்டபத்தில் தமது ஆள் அடையாளத்தை நிரூபித்தல் வேண்டும்.*

*11. **விண்ணப்பப்படிவம் முன்வைத்தல்**.- தட்டச்சு கடதாசி அளவுள்ள (ஏ-4) கடதாசியில் விண்ணப்பதாரியினாலேயே விண்ணப்பப்படிவம் தயாரிக்கப்பட வேண்டும். விண்ணப்பப்படிவத்தை இட்டு அனுப்பும் கடித உறையின் இடதுபக்க மேல் மூலையில் "உப புகையிரத நிலைய அதிபர் பதவிக்கான விண்ணப்பப்படிவம் ............................. புகையிரத நிலையம்" (இடைவெளியில் தான் விண்ணப்பித்த உப புகையிரத நிலையத்தின் பெயரைக் குறிப்பிட்டு) எனக் குறிப்பிட்டு "புகையிரத முகாமையாளர், தபால் பெட்டி இல. 355, புகையிரத முகாமையாளர் அலுவலகம், கொழும்பு 10" எனும் முகவரிக்கு 2018.01.29 ஆந் திகதி அல்லது அதற்கு முன்பு பதிவுத்தபால் மூலம் அனுப்பிவைத்தல் வேண்டும். (மாதிரி விண்ணப்பப்படிவம் கீழ்க்குறிப்பிடப்பட்டுள்ளது).*

*12. **விண்ணப்பப்படிவத்தை உறுதிப்படுத்தல்**.- விண்ணப்பப்படிவத்திலுள்ள விண்ணப்பதாரியின் கையொப்பத்தை அரசாங்க பாடசாலை அதிபர்/ சமாதான நீதவான்/ சத்தியப்பிரமாண ஆணையாளர்/ சட்டத்தரணி/ முப்படைகளின் அதிகாரம்பெற்ற உத்தியோகத்தர்/ அல்லது பொலிஸ் சேவையில் வர்த்தமானியில் பிரசுரிக்கப்பட்ட பதவியை வகிக்கும் உத்தியோகத்தர்/அல்லது வருடத்திற்கு ரூபா 2,37,060 இற்கு குறையாத ஒன்றிணைந்த சம்பளத்தைப் பெறும் அரச சேவையில் நிரந்தர பதவியை வகிக்கும் உத்தியோகத்தர் ஒருவரினால் உறுதிப்படுத்தப்படல் வேண்டும்.*

எஸ். எம். அபேவிக்ரம,
புகையிரத முகாமையாளர்.

*புகையிரத முகாமையாளர் அலுவலகம்,
கொழும்பு 10,
2017, திசெம்பர் 12.*

மாதிரி விண்ணப்பப்படிவம்

**இலங்கைப் புகையிரத திணைக்களத்திற்கு ஒப்பந்த அடிப்படையில் உப புகையிரத நிலைய அதிபர்களை சேர்த்துக்கொள்வதற்கான போட்டிப் பரீட்சை**

விண்ணப்பிக்கும் உப புகையிரத நிலையம் (சிங்களத்தில்/ தமிழில்) :

முதலாவது விருப்பம் :----.
இரண்டாவது விருப்பம் :----.
மூன்றாவது விருப்பம் :----.

விண்ணப்பிக்கும் உப புகையிரத நிலையம் (ஆங்கிலத்தில்) :

முதலாவது விருப்பம் :----.
இரண்டாவது விருப்பம் :----.
மூன்றாவது விருப்பம் :----.

1. (i) முழுப்பெயர் (சிங்களத்தில்/ தமிழில்) :----.
(ii) முழுப்பெயர் (ஆங்கிலத்தில்) :----.
(iii) முதலெழுத்துக்களுடன் பெயர் (சிங்களத்தில்/ தமிழில்) :----.
(iv) முதலெழுத்துக்களுடன் பெயர் (ஆங்கிலத்தில்) :----.

2. நிரந்தர முகவரி :-

(i) சிங்களத்தில்/ தமிழில் :----.
(ii) ஆங்கிலத்தில் :----.
(iii) தொலைபேசி இலக்கம் :- (வீடு) :----, கையடக்க :----.

3. (i) பிறந்த திகதி :----.

2018.01.29 ஆந் திகதியன்று வயது :

வருடங்கள் [ | | | ] மாதங்கள் [ | ] நாட்கள் [ | ]

(விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்படும் கடைசித் தினத்தன்று)

(ii) உயரம் :----.

(iii) நெஞ்சளவு :----.

4. தேசிய அடையாள அட்டை இலக்கம் :

5. மாவட்டம் (சிங்களத்தில்/ தமிழில்) : ஆங்கிலத்தில் :

6. பிரதேச செயலாளர் பிரிவு (சிங்களத்தில்/ தமிழில்) :

(ஆங்கிலத்தில்) :

கிராமசேவையாளர் பிரிவு (சிங்களத்தில்/ தமிழில்) :

(ஆங்கிலத்தில்) :

7. உமது நிரந்தர வசிப்பிடத்திலிருந்து நீர் விண்ணப்பிக்கும் உப புகையிரத நிலையத்திற்குள்ள தூரம் (நேரடித் தூரம்) கி. மீ. மூலம் குறிப்பிடவும் :

| உப புகையிரத நிலையம் | தூர அளவு (கி. மீ.) |
|---|---|
| | |
| | |
| | |

8. கல்வித் தராதரம் :

க. பொ. த. (சா. தரம்) :

| வருடமும் சுட்டெண்ணும் | விடயங்கள் | பெறுபேறுகள் |
|---|---|---|
| | | |
| | | |
| | | |
| | | |
| | | |
| | | |

9. வேறு தராதரங்கள் :----.

10. பரீட்சைக்குத் தோற்றும் மொழிமூலம் (சிங்களம்/ தமிழ்) :

11. நீர் ஏதாவது குற்றம் காரணமாக நீதிமன்றம் மூலம் குற்றவாளியாகக் கருதப்பட்டிருப்பின் விபரம் தருக :----.

12. ................................................... ஆந் திகதி, மக்கள் வங்கியின் ......................................... கிளையில் ரூபா 500 ஐ வரவு வைத்துப் பெற்றுக்கொண்ட பற்றுச்சீட்டின் மூலப்பிரதியை இணைத்து அனுப்புகிறேன். (வேறு வழிகள் மூலம் பரீட்சைக் கட்டணம் செலுத்துதல் விண்ணப்பப்படிவத்தை நிராகரிப்பதற்குக் காரணமாக அமையும்.) :----.

*13.* **விண்ணப்பதாரியின் உறுதிப்படுத்துகை :**

(அ) இவ்விண்ணப்பப்படிவத்தில் என்னால் வழங்கப்பட்டுள்ள தகவல்கள் யாவும் உண்மையானதெனவும் சரியானதெனவும் உறுதிமொழிகிறேன்.

(ஆ) என்னால் வழங்கப்பட்டுள்ள இத்தகவல்கள் பொய்யானதெனவும் பிழையானதெனவும் நான் நியமிக்கப்படுவதற்கு முன்பு கண்டு பிடிக்கப்படுமிடத்து நான் தகுதியற்றவராகக் கருதப்படுவதுடன் நியமனம் பெறப்பட்ட பிறகு கண்டு பிடிக்கப்படுமிடத்து எனது சேவையை முடிவுறுத்துவதற்கு நான் கீழ்ப்படிவதாகவும் அறிவேன்.

----,
விண்ணப்பதாரியின் கையொப்பம்.

திகதி :----.

*14.* **விண்ணப்பதாரியின் கையொப்பத்தை உறுதிப்படுத்தல் :**

இவ்விண்ணப்பப்படிவத்தை முன்வைக்கும் தேசிய அடையாள அட்டை இலக்கம் .................... ஐ உடைய திரு. ........... .................... என்பவரை நான் தனிப்பட்ட வகையில் அறிவேன் என்றும் அவர் இன்று என் முன்னிலையில் அவரின் கையொப்பத்தை இட்டார் எனவும் உறுதிப்படுத்துகிறேன்.

----,
உறுதிப்படுத்துபவரின் கையொப்பம்.

உறுதிப்படுத்துபவரின் பெயர் :----.
பதவி :----.
முகவரி :----.
திகதி :----.
(இறப்பர் இலச்சினையைப் பொறிக்கவும்.)

*12-933*

கவனிக்க.- 2017.12.22 ஆந் திகதிய இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசு வர்த்தமானியின் பகுதி IV(அ) பிரசுரிக்கப்படவில்லை.

# ශ්‍රී ලංකා ප්‍රජාතාන්ත්‍රික සමාජවාදී ජනරජයේ ගැසට් පත්‍රය
# இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசு வர்த்தமானப் பத்திரிகை

අංක 2052 - 2017 දෙසැම්බර් මස 29 වැනි සිකුරාදා - 2017.12.29

*2052 ஆம் இலக்கம் - 2017 ஆம் ஆண்டு திசெம்பர் மாதம் 29 ஆந் திகதி வெள்ளிக்கிழமை*

(அரசாங்கத்தின் அதிகாரத்துடன் பிரசுரிக்கப்பட்டது)

# பகுதி I : தொகுதி (IIஆ) – விளம்பரங்கள்

(ஒவ்வொரு மொழியின் ஒவ்வொரு பகுதியும் வெவ்வேறாக கோவை செய்து வைப்பதற்காகத் தனித்தனிப் பக்கங்கள் தரப்பட்டுள்ளன.)


| | பக்கம் | | பக்கம் |
|---|---|---|---|
| கேள்விப்பத்திர அறிவித்தல்கள் | - | உத்தியோகத் தொடர்பற்ற அறிவித்தல்கள் | *2406* |
| கேள்விப்பத்திர முடிவுகள் பற்றிய அறிவித்தல்கள் | - | அந்நிய குடிவகை உத்தரவுச்சீட்டு விண்ணப்பங்கள் | - |
| பொருட்கள் விற்பனவும் பிறவும் | - | ஏல விற்பனைகள் | *2410* |
| ஆய விற்பனையும் குத்தகை விற்பனையும் | - | நானாவித அறிவித்தல்கள் | - |


**வாராந்த வர்த்தமானிகளிற் பிரசுரிப்பதற்கான அறிவித்தல்கள் ஏற்றுக்கொள்ளல் சம்பந்தமான**

**முக்கிய அறிவித்தல்கள்**

இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசு வாராந்த வர்த்தமானப் பத்திரிகைகளின் இறுதியில், ஒவ்வொரு மாதத்தின் முதல் வாரத்தின், வாராந்த வர்த்தமானப் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படுவதற்கான அறிவித்தல்கள் ஏற்றுக்கொள்ளப்படும் இறுதித் திகதியும் நேரமும் சம்பந்தமான அறிவித்தல்களுக்கு கவனம் கோரப்படுகின்றது.

வாராந்த வர்த்தமானிகளிற் பிரசுரிக்கப்படுவதற்கான அறிவித்தல்கள் ஏற்றுக்கொள்ளப்படும் இறுதித் தினம் அவை **வர்த்தமானியில் பிரசுரமாகும் திகதிக்கு இரண்டு வாரங்களுக்கு முந்திய வெள்ளிக்கிழமை, நண்பகல் 12.00 மணியாகும்**. இறுதித் திகதியும் நேரமும் குறிப்பிடும் அறிவித்தல்களான, பதவி-வெற்றிடங்கள் மற்றும் பரீட்சைகளுக்கு விண்ணப்பம் கோரும் அறிவித்தல்கள், கேள்விப்பத்திர அறிவித்தல்கள் அத்துடன் ஏல விற்பனைத் திகதியும் நேரமும் குறிப்பிடும் அறிவித்தல்கள் என்பன அவ்வவ் அறிவித்தல்களில் உள்ள விடயங்களில் அக்கறை செலுத்துவோர் ஆக்கபூர்வமாக பயனுறும் வகையில் அவை பிரசுரிக்கப்படுவதற்காக அரசாங்க அச்சகத்துக்கு அனுப்பிவைக்கப்படும் திகதியிலிருந்தும் அத்துடன் அவை பிரசுரமாகும் திகதியிலிருந்தும் போதிய கால அவகாசம் கொண்டதாக தயாரிக்கப்பட்டு அனுப்பிவைக்கப்பட வேண்டும் என சகல அரசாங்க திணைக்களங்கள், கூட்டுத்தாபனங்கள், சபைகள் ஆகியன அறிவுறுத்தப்படுகின்றன. அறிவித்தல்கள் தொடர்பிலான பிழைதிருத்தங்கள் சம்பந்தமாக செய்யப்படும் முறைப்பாடுகள் மற்றும் விசாரணைகள் என்பன வர்த்தமானியில் குறிப்பிட்ட அறிவித்தல்கள் பிரசுரமாகிய திகதியிலிருந்து மூன்று மாதங்கள் கழிந்த பின்னர் ஏற்றுக்கொள்ளப்படமாட்டா என்பதனை கவனத்திற்கொள்ளவும்.

வர்த்தமானப் பத்திரிகையில் பிரசுரமாகும் சகல அறிவித்தல்களும், அவை பிரசுரமாகும் திகதிக்கு **இரண்டு வாரங்களுக்கு முன்னர்**, அதாவது *2018, சனவரி மாதம் 19 ஆந் திகதி வெள்ளிக்கிழமை பிரசுரிக்கப்படவேண்டிய அறிவித்தல்கள் 2018, சனவரி மாதம் 05 ஆந் திகதி நண்பகல் 12.00 மணிக்கு அல்லது அதற்கு முன்னர் கிடைக்கக்கூடியவாறு தபால் மூலம் அல்லது நேரில் சேர்ப்பிக்கப்பட வேண்டும்.*

**2006 ஆம் ஆண்டின் 19 ஆம் இலக்க, இலத்திரனியல் கொடுக்கல் வாங்கல் சட்டத்தின் 9 ஆம் பிரிவு**

*"ஏதேனும் பிரகடனம், விதி, ஒழுங்கு விதி, கட்டளை, துணை விதி, அறிவிப்பு அல்லது வேறு விடயம் வர்த்தமானியில் வெளியிடப்பட வேண்டுமென ஏதேனும் சட்டம் அல்லது சட்டவாக்கம் ஏற்பாடு செய்யுமிடத்து, அப்போது, அத்தகைய விதி, ஒழுங்குவிதி, கட்டளை, துணை விதி, அறிவிப்பு அல்லது வேறு விடயம் இலத்திரன் வடிவத்தில் வெளியிடப்படின், அத்தகைய தேவைப்பாடு திருப்திப்படுத்தப்பட்டுள்ளதாகக் கருதப்படுதல் வேண்டும்."*

**கங்கானி லியனகே,**
அரசாங்க அழுத்தகர் (பதில்).

*அரசாங்க அச்சுத் திணைக்களம்,*
*கொழும்பு 8,*
*2017 ஆம் ஆண்டு சனவரி மாதம் 01 ஆந் திகதி.*

*இவ்வர்த்தமானியை* www.documents.gov.lk *எனும் இணையத்தளத்திலிருந்து பதிவிறக்கம் செய்ய முடியும்.*

# உத்தியோகத் தொடர்பற்ற அறிவித்தல்கள்

## அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1) ஆம் பிரிவின் கீழ் பின்வரும் கம்பனி கூட்டிணைக்கப்பட்டுள்ளது என அறிவிக்கப்படுகின்றது.-

கம்பனியின் பெயர்: சதிஷ டிஸ்ரிபியூட்டரிஸ் (பிறைவேட்) லிமிட்டட்
பதிவிலக்கம் : பீவீ 125490
கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.09.13
பதிவு முகவரி : A/10, மதகொட்டுவ, ஊரபொல

கம்பனிச் செயலாளர்கள்.

A/10,
மதகொட்டுவ,
ஊரபொல.

12-861

---

## பொது அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1) ஆம் பிரிவின் கீழ் பின்வரும் கம்பனி கூட்டிணைக்கப்பட்டுள்ளது என அறிவிக்கப்படுகின்றது.-

கம்பனியின் பெயர்: சர்கியூலர் (பிறைவேட்) லிமிட்டட்
கம்பனி இல. : பீவீ 127504
கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017, நவெம்பர் 22
பதிவு முகவரி : 56/1, கிங்சி ரோட், கொழும்பு 7

பணிப்பாளர்.

12-875

---

## பொது அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 244(3)ஆம் பிரிவிற்கிணங்க, பெரடயிஸ் அயிலண்ட் ரிசோட்ஸ் (பீவீஇ) எல் டீடி (பீவீ75790), மற்றும்வரையறுக்கப்பட்ட அவாநி அம்பலங்கொட (பிறைவேட்) லிமிட்டட் (பீவீ 92721) என்பனவற்றை வரையறுக்கப்பட்ட ஜடா ரிசோட் என்ட் ஸ்பா (பிறைவேட்) லிமிட்டட் (பீவீ 11904) உடன் இணைக்கும் பணிகள் பூர்த்தியடைந்துள்ளன. இவ்விணைவினைக் குறிக்கும் சான்றிதழானது, கம்பனிகள் பதிவாளர் நாயகத்தினால் 2007 ஆம் ஆண்டின் கம்பனிகள் சட்டத்தின் 244(1) ஆம் பிரிவிற்கிணங்க. 2017 , நவெம்பர் 28 ஆம் திகதி அன்று வெளியிடப்பட்டது எனும் அறிவித்தல் இங்கு தரப்படுகின்றது.

கூட்டிணைக்கப்பட்ட ஜடா ரிசோட் என்ட் ஸ்பா ( பிறைவேட்) லிமிட்டட்டின் பதிவு செய்யப்பட்ட அலுவலகமானது கனி லங்கா ரிசோட் அன்ட் ஸ்பா, இல. 272, புனித செபஸ்தியான் வீதி, கட்டுக்குருந்தை, களுத்துறை என்பதாகும்.

வரையறுக்கப்பட்ட ஜடா ரிசோர்ட்ஸ் அன்ட் ஸ்பா தனியார் நிறுவனத்தின் பணிப்பாளர் சபையின் உத்தரவுக்கிணங்க,

ஹேமாஸ் கோர்பரேட் சேர்விசஸ்
(பிறைவேட்) லிமிட்டட். செயலாளர்கள்.

12-877

---

## அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1) ஆம் பிரிவின் கீழ் பின்வரும் புதிய கம்பனி கூட்டிணைக்கப்பட்டுள்ளது என அறிவிக்கப்படுகின்றது.-

கம்பனியின் பெயர்: குளோபல் வெல்ஸ் (பிறைவேட்) லிமிட்டட்
கம்பனியின் பதிவிலக்கம் : பீவீ 127845
கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.12 .06
பதிவு முகவரி : ஷெய்ஹு இப்றாஹிம் வீதி, வாழைச்சேனை

கம்பனிச் செயலாளர்கள்

12-878

---

## அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் பிரகாரம் பின்வரும் கம்பனி 2017.11.30 ஆம் திகதி கூட்டிணைக் கப்பட்டுள்ளது.-

கம்பனியின் பெயர்: ஒஷன் நெட்வேர்க் எக்ஸ்பிரஸ் லங்கா (பிறைவேட்) லிமிட்டட்
பதிவிலக்கம் : பீவீ 127631
பதிவு முகவரி : இல. 9/5, தம்பையா அவனியூ, கொழும்பு 7

ஜேசீ அன்ட் கம்பனி
கம்பனிச் செயலாளர்கள்.

இல. 9/5,
தம்பையா அவனியூ,
கொழும்பு 7.

12-883

## அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1) ஆம் பிரிவின் கீழ் பின்வரும் கம்பனி பொறுப்பு வாய்ந்த கம்பனியாகக் கூட்டிணைக்கப்பட்டுள்ளது.-

கம்பனியின் பெயர்: டீ.என். இன்ஜினியரிங் என்ட் கன்ஸ்ட்ரக்ஷன் (பிறைவேட்) லிமிட்டட்
பதிவிலக்கம் : பீவீ 88643
கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2012.10.04
முகவரி : இல. 114ஏ, ரத்கம சந்தி, ரத்கம

கம்பனிச் செயலாளர்கள்.

12-887

---

## அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1) ஆம் பிரிவின் கீழ் , பின்வரும் கம்பனி கூட்டிணைக்கப்பட்டுள்ளதென இத்தால் அறிவிக்கப்படுகின்றது.-

கம்பனியின் பெயர்: ஈகள் சென்ட்ரி (பிறைவேட்) லிமிட்டட்
பதிவிலக்கம் : பீவீ 127228
கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.11.14
பதிவு முகவரி : இல. 93, ஏ பொல்ஹேன , வளான, வெலிகம

லிவிக் கோபரேட் ஐ (பிறைவேட்) லிமிட்டட்,
கம்பனிச் செயலாளர்.

12-943

---

## கம்பனியொன்றின் கூட்டிணைப்பு அறிவித்தல்

பின்வரும் கம்பனியின் கூட்டிணைப்புத் தொடர்பாக , 2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1) ஆம் பிரிவின் பிரகாரம் இத்தால் அறிவித்தல் வழங்கப்படுகின்றது.-

கம்பனியின் பெயர்: செனிகல் (பிறைவேட்) லிமிட்டட்
பதிவு அலுவலக முகவரி : இல. 28/5, வஜிர பாதை, கொழும்பு 4
கம்பனியின் இலக்கம் : பீவீ 124049
கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.07.21

சிஏஎஸ் கோபரேட் சேர்விசஸ் (பிறைவேட்) லிமிட்டட்,
செயலாளர்கள்.

12-969

---

## கம்பனியொன்றின் கூட்டிணைப்பு அறிவித்தல்

பின்வரும் கம்பனியின் கூட்டிணைப்பு தொடர்பாக , 2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1) ஆம் பிரிவின் பிரகாரம் இத்தால் அறிவித்தல் வழங்கப்படுகின்றது.-

கம்பனியின் பெயர்: ஷிம்மர் ஸ்ப்ரிங்ஸ் (பிறைவேட்) லிமிட்டட்
பதிவு அலுவலக முகவரி : இல.18/14, பியகம பாதை, தல்வத்த, கோணவல
கம்பனியின் இலக்கம் : பீவீ 124689
கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.08.15

சிஏஎஸ் கோபரேட் சேர்விசஸ் (பிறைவேட்) லிமிட்டட்,
செயலாளர்கள்.

12-970

---

## பொது அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9(1) ஆம் பிரிவின் கீழ், பின்வரும் கம்பனி கூட்டிணைக்கப்பட்டுள்ளதென இத்தால் அறிவிக்கப்படுகின்றது.-

கம்பனியின் பெயர் : டீ. டி.ஏ. எட்டலி என்ட் சன் (பிறைவேட்) லிமிட்டட்
பதிவிலக்கம் : பீவீ 67232
கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2009.03.09
பதிவு முகவரி : இல. 363, சிறிமாவோ பண்டாரநாயக்க மாவத்தை, கொழும்பு 14

ஃபர்ஸ்ட் கோப்பரேட் சொலூசன்ஸ் லிமிட்டட்
செயலாளர்கள்.

12-971

---

## அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9 ஆம் பிரிவின் கீழ், பின்வரும் கம்பனி கூட்டிணைக்கப்பட்டதாக இத்தால் அறிவிக்கப்படுகின்றது.-

கம்பனியின் பெயர்: மக்சிமல் டிரேடிங் (பிறைவேட்) லிமிட்டட்
கம்பனியின் இல. : பீவீ 125989
பதிவு முகவரி : இல. 47, அலெக்சாண்ட்ரா பிளேஸ், கொழும்பு 7.
கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.10.12

கோப்பரேட் அட்வைசரி சேர்விசஸ் (பிறைவேட்) லிமிட்டட்,
கம்பனிச் செயலாளர்கள்.

12-973

## அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9 ஆம் பிரிவின் கீழ், பின்வரும் கம்பனி கூட்டிணைக்கப்பட்டதாக இத்தால் அறிவிக்கப்படுகின்றது.-

கம்பனியின் பெயர்: ஜிலின் கியென்குயி கோப்பரேசன் லங்கா (பிறைவேட்) லிமிட்டட்
கம்பனியின் இல. : பீவீ 126262
பதிவு முகவரி : இல. 420, தரை மாடி, எல்விடிகல மாவத்தை, கொழும்பு 5
கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.10.11

கோப்பரேட் அட்வைசரி சேர்விசஸ் (பிறைவேட்) லிமிட்டட்,
கம்பனிச் செயலாளர்கள்.

12- 974

---

## பொது அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9 ஆம் பிரிவின் கீழ், கூட்டிணைக்கப்பட்டதாக அறிவிக்கப்படுகின்றது.-

கம்பனியின் பெயர்: அதமா (பிறைவேட்) லிமிட்டட்
பதிவு இலக்கம் : பீவீ 126788
பதிவு செய்யப்பட்ட முகவரி : இல. 19/3, சுவர்ணா வீதி, கொழும்பு 6
கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.11.17

கம்பனிச் செயலாளர்கள்.

12- 976

---

## பொது அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் கீழ், கீழ்வரும் கம்பனி பின்வருமாறு கூட்டிணைக்கப்பட்டுள்ளதென இத்தால் அறிவிக்கப்படுகின்றது.-

கம்பனியின் பெயர்: சுதேஷ் என்டர்பிரைசஸ் என்ட் என்ஸ்போட்ஸ் (பிறைவேட்) லிமிட்டட்
கம்பனி பதிவிலக்கம் : பீவீ 127924
கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.12.08
கம்பனி பதிவு முகவரி : இல. 100, பராக்கிரம மாவத்தை, பேலியகொடை

12- 1025

## பகிரங்க அறிவித்தல்

குறொஸாட் ( பிறைவேட்) லிமிட்டட்
( கம்பனி இல. PB 788 P V)
நியோபிரெக்ஸ் ( பிறைவேட்) லிமிட்டட்
( கம்பனி இல. PB 497 PV)
டிப்பெட் புரெடெக்ஸ் பீஎல்சீ
( கம்பனி இல. PQ 60)

ஆகியவற்றின் ஒருக்கிணைப்பு

PB 788 P V என்ற கம்பனி இலக்கத்தின் கீழ் பதிவுசெய்யப்பட்ட குறொஸாட் ( பிறைவேட்) லிமிட்டட் PB 497 P V என்ற கம்பனி இலக்கத்தின் கீழ் பதிவு செய்யப்பட்ட நியோபிரெக்ஸ் ( பிறைவேட்) லிமிட்டட் மற்றும் PQ 60 என்ற கம்பனி இலக்கத்தின் கீழ் பதிவுசெய்யப்பட்ட டிப்பெட் புரெடெக்ஸ் பீஎல்சீ ஆகியன அதிகாரச் சட்டத்தின் 242 ஆம் பிரிவின் நிபந்தனைகளுக்கேற்ப ஒரே நிறுவனமாக ஒருங்கிணைக்கப்படும் என்பது 2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் அதிகாரச் சட்டத்தின் ("அதிகாரச் சட்டம்") 242(3) பீ பிரிவிற்கு அமைய இத்தால் அறிவிக்கப்படுகின்றது.

ஒருங்கிணைக்கப்பட்ட கம்பனி டிப்பெட் புரெடெக்ஸ் பிஎல்சி என்று அழைக்கப்படும். இந்த ஒருங்கிணைப்பு 2018, சனவரி 17 ஆந் திகதியில் அல்லது கம்பனிகள் பதிவாளர் நாயகத்தினால் அங்கீகரிக்கப்படும் திகதியில் நடைமுறைக்கு வரும்.

ஒருங்கிணைக்கப்பட்ட கம்பனியாக டிப்பெட் புரெட்க்ஸ் பிஎல்சி பதிவு செய்யப்பட்ட அலுவலகம் இல. 400, டீன்ஸ் வீதி, கொழும்பு 10 இல் அமைந்திருக்கும்.

அதிகாரச் சட்டத்தின் 242( 4 ) ஆம் பிரிவிற்கு அமைய ஒன்றிணைத்தலை அங்கீகரிக்கும் தீர்மானங்கள், ஒன்றாக எடுக்கப்படுகையில் அங்கீகரிக்கப்பட்டுள்ள ஒன்றிணைத்தல் முன்மொழிவொன்றாக அமைவதாகக் கருதப்படல் வேண்டும். அத்துடன் அவற்றின் பிரதிகளை ஒருங்கிணைக்கப்படும் கம்பனிகளின் எவரேனுமொரு பங்குதாரர் அல்லது கடன்வழங்குநர் அல்லது உரிமையுள்ள எவரேனுமொருவர் சப்புகஸ்கந்த, மாகொல எனும் இடத்தில் அமைந்திருக்கும் ஒருங்கிணைக்கப்படும் கம்பனிகளின் பதிவு செய்யப்பட்ட அலுவலகத்தில் வழமையாக அலுவலக நேரங்களில் பார்வையிடலாம்.

பணிப்பாளர்கள் சபையின் கட்டளைப்படி,

ஹேலீஸ் குரூப் சேர்விசஸ் (பிறைவேட்) லிமிட்டட்
செயலாளர்கள்.

இல. 400, டீன்ஸ் வீதி,
கொழும்பு 10.
2017, திசெம்பர் 14.

12-1070

---

## அறிவித்தல்

2007 ஆம் ஆண்டின் 7 ஆம் இலக்க கம்பனிகள் சட்டத்தின் 9 ஆம் பிரிவின் கீழ், பின்வரும் கம்பனி கூட்டிணைக்கப்பட்டுள்ளதென அறிவிக்கப்படுகின்றது.-

கம்பனியின் பெயர்: கண்டியன் டிரஸ்ட் இன்வெஸ்ட்மென்ட் (பிறைவேட்) லிமிட்டட்
பதிவிலக்கம் : பீவீ 124718
கூட்டிணைக்கப்பட்ட திகதி : 2017.09.06
பதிவு முகவரி : இல.374/1, மாளிகாதென்ன, குருதெனிய

எச். ஆர். பீ. பி. ஆர். நவரத்ன
கம்பனிச் செயலாளர்.

12-1100

---

## அற்றோணித்தத்துவத்தை இரத்துச் செய்தல்

இலக்கம் 40, சம்போதி மாவத்தை, பல்லிமுல்ல, மாத்தறை என்ற முகவரியில் வசிக்கும் புத்தப்பிரிய ஒமேஷன் ஹக்மனகே ஆகிய என்னால் இலக்கம் 40, சம்போதி மாவத்தை, பல்லிமுல்ல, மாத்தறையில் வசிக்கும் பரன விதானகெயி சீலவதி அல்லது சீலவதீ பரன விதானகே அல்லது லீலாவதீ பரன விதானகே அல்லது லீலா ஹக்மனகே என்பவருக்கு வழங்கப்பட்டதும் மாத்தறை பிரசித்த நொத்தாரிசு டப் . கே. ஜீ. சஜீவனி என்பவரினால் எழுதி அத்தாட்சிப் படுத்தப்பட்ட 522 என்ற இலக்கத்தையும் 2009.10.26 என்ற திகதியையும் கொண்ட அற்றோணித்தத்துவமானது 2016. 11.16 ஆந் திகதி முதல் அமுலுக்கு வரும் வகையில் இரத்துச் செய்யப்பட்டு இல்லாதொழிக்கப்படுகின்றதென்பதை அனைவருக்கும் அறிவித்துக்கொள்கின்றேன். அத்துடன் அத்தினத்தின் பின்னர் அவர் மேற்கொள்ளும் எவ்வித நடவடிக்கைகளுக்கும் நான் பொறுப்பேற்க மாட்டேன் என்பதையும் அறிவித்துக்கொள்கின்றேன்.

புத்தப்பிரிய ஒமேஷன் ஹக்மனகே .

12- 906

---

## அற்றோணித்தத்துவத்தை இரத்துச் செய்தல்

இலக்கம் 40, சம்போதி மாவத்தை, பல்லிமுல்ல, மாத்தறை என்ற முகவரியில் வசிக்கும் ஷெல்டன் ஹக்மனகே ஆகிய என்னால் இலக்கம் 40, சம்போதி மாவத்தை, பல்லிமுல்ல, மாத்தறையில் வசிக்கும் லீலாவதீ பரன விதானகே அல்லது சீலவதீ பரணவிதானகே அல்லது லீலா ஹக்மனகே என்பவருக்கு வழங்கப்பட்டதும் மாத்தறை பிரசித்த நொத்தாரிசு திச்ச திசாநாயக்க என்பவரினால் எழுதி அத்தாட்சிப்படுத்தப்பட்ட 14092 என்ற இலக்கத் தையும் 1991.04.12 என்ற திகதியையும் கொண்ட அற்றோணித் தத்துவமானது 2016. 11.16 ஆந் திகதி முதல் அமுலுக்கு வரும் வகையில் இரத்துச் செய்யப்பட்டு இல்லா தொழிக்கப்படுகின்றதென்பதை அனைவருக்கும் அறிவித்துக் கொள்கின்றேன். அத்துடன் அத்தினத்தின் பின்னர் அவர் மேற்கொள்ளும் எவ்வித நடவடிக்கைகளுக்கும் நான் பொறுப்பேற்க மாட்டேன் என்பதையும் அறிவித்துக் கொள்கின்றேன்.

ஷெல்டன் ஹக்மனகே .

12- 907

---

## அற்றோணித்தத்துவத்தை இரத்துச் செய்தல்

இரத்தினபுரி, உடகரவிட்ட, கரவிட்ட, ஹொரகஹயட்டவில் வதியும், பரகல முதியன்சேலாகே ரன்ஜித் ஜயவர்த்தன ( தே.அ.அ.இல. 680612226V) ஆகிய நான், கொழும்பு மாவட்டத்தின், அவிஸ்ஸாவளை உயர் நீதிமன்ற வளவில் பிரசித்த நொத்தாரிசு கே. எல். டீ. ஹுனட்டிகலவினால் அத்தாட்சிப்படுத்தப்பட்ட 5435ஆம் இலக்க 2017.05.02 ஆந் திகதியிடப்பட்ட அற்றோணித் தத்துவத்தினால் பொக்குறுவிட்டவிமன , இலக்கம் 364/1 இல் வதியும் ரன்ஜித் அமரசிங்கவிற்கு ( தே.அ.அ.இல. 642851543V) வழங்கப்பட்ட அற்றோணித்தத்துவம் இன்று முதற்கொண்டு இரத்துச் செய்யப்பட்டுள்ளதாகவும் அவரால் இனிமேல் மேற்கொள்ளப்படும் எந்தவொரு நடவடிக்கைகளுக்கும் நான் பொறுப்புக் கூறமாட்டேன் எனவும் இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசின் அனைவருக்கும் இத்தால் அறியத்தருகின்றேன்.

12- 946

பீ. எம். ஆர். ஜயவர்தன,

---

## அற்றோணித்தத்துவத்தை இரத்துச் செய்தல்

இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசின் சிலாபம், குருநாகல் வீதி, இல. 89/4 ஐச் சேர்ந்த மிஹிங்குலசூரிய ஹென் கிசந்தா பெர்னாந்து ஆகிய நான், பிரசித்த நொத்தாரிசு எச். ஜிந்தக கருணாசேன அத்தாட்சிப்படுத்தியதும் சிலாபம், குருநாகல் வீதி, இல. 89/4 என்ற முகவரியைச் சேர்ந்த உதிரிஅப்புவடுகே தேரேஸ் மாலனீ பிரனாந்து என்பவருக்கு வழங்கப்பட்டதுமான 2013.12.21 ஆந் திகதி கொண்ட 208 ஆம் இலக்க பொது அற்றோணித் தத்துவத்தை இத்தினத்திலிருந்து இல்லாதொழித்தும் இரத்துச் செய்தும் வறிதாக்கியும் விடுகின்றேன் என இத்தால் பொது மக்களுக்கும் இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசின் அரசாங்கத்திற்கும் அறிவித்துக் கொள்கின்றேன்.

எல் .ஏ. எப்.இரந்த டிக்ஷன்.

2017.12.11.

12-949

---

## அற்றோணித்தத்துவத்தை இரத்துச் செய்தல்

இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசின் மொறட்டுவ, சொய்சாபுர மனை, இல. B24/G2, ஐச் சேர்ந்த சவரிமுத்து ரீட்டா

ரத்னபதி (ரீட்டா மரியநாயகம் என்று அழைக்கப்படும்) ஆகிய நான், பிரசித்த நொத்தாரிசு எச் கங்காதரன் அத்தாட்சிப்படுத்தியதும் கொழும்பு 06, வெள்ளவத்தை, சங்கம் ஒழுங்கை, இல. 8A 4/2 என்ற முகவரியைச் சேர்ந்த தன்ஞ்ஜெயன் ஜெயந்தினி என்பவருக்கு வழங்கப்பட்டதுமான 2015.05.30 ஆந் திகதி கொண்ட 13171 ஆம் இலக்க பொது அற்றோணித்தத்துவத்தை இத்தினத்திலிருந்து இல்லாதொழித்தும் இரத்துச் செய்தும் வரிதாக்கியும் விடுகின்றேன் என இத்தால் பொது மக்களுக்கும் மேற்படி இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசின் அரசாங்கத்திற்கும் அறிவித்துக் கொள்கின்றேன்.

சவரிமுத்து ரீட்டா ரத்னபதி.

12-950

---

## அற்றோணித்தத்துவத்தை இரத்துச் செய்தல்

மாஸ்பொத, பெல்லன்தெனிய இல் வசிக்கும் விதானகே நிஸான்த த சில்வா ஆகிய என்னால் மாஸ்பொத, பெல்லன்தெனிய இல் வசிக்கும் விதானகே அநுருத்த த சில்வா (தேசிய அடையாள அட்டை இல. 652601642V) என்பவருக்கு வழங்கப்பட்டிருந்த குருநாகல் வழக்கறிஞர் மற்றும் அனுமதிபெற்ற பதிவாளர் திருமதி எஸ். பீ. வன்துராகல அவர்களால் 2005.04.08 ஆந் திகதி உறுதிப் படுத்தப்பட்ட 12441 ஆம் இலக்கமுடைய அற்றோணி அதிகாரம் இன்றைய தினம் முதல் இரத்துச் செய்யப்பட்டு அதிகாரம் நீக்கப்பட்டுள்ளது என்பதை இலங்கைச் சனநாயக சோசலிசக் குடியரசிற்கும், பொது மக்களுக்கும் இத்தால் அறிவிதது்க் கொள்கின்றேன்.

டபிள்யூ. நிஸான்த தி சில்வா.

12- 975

---

## அற்றோணித்தத்துவத்தை இரத்துச் செய்தல்

பஸ்யால, கலல்பிட்டிய, இந்திகொல்லவத்த, இலக்கம் 237/1 இல் வசித்துவரும் நெவில் ரெஜினல் லொகுகலப்பத்திகே (தே.அ.அ.பழைய இலக்கம் 652461772 வி , புதிய இலக்கம்196524601778) என்ற என்னால் , பஸ்யால, கலல்பிட்டிய, இந்திகொல்லவத்த , இலக்கம் 237/1 இல் வசித்துவரும் ரணதுங்க ஆரச்சிகே ரம்யா புஷ்பகாந்தி ரணதுங்க என்பவருக்கு பிரசித்த நொத்தாரிசு எச்.எம்.பீ.எம். ஹேரத் அவர்களினால் இலக்கம் 1947 மற்றும் 2005.03.01 ஆந் திகதியிடப்பட்டு அத்தாட்சிப்படுத்தப்பட்ட அற்றோணித்தத்துவத்தை 2017.12.12 ஆந் திகதி முதல் இரத்துச் செய்கின்றேன் என்பதையும் இது தொடர்பில் இனிவரும் காலங்களில் முன்னெடுக்கப்படும் கொடுக்கல் வாங்கல்களுக்கும் நான் பொறுப்பல்ல என்பதையும் இலங்கை மக்கள் அனைவருக்கும் அறியத்தருகின்றேன்.

நெவில் ரெஜினல் லொகுகலப்பத்திகே.

12- 1102

---

# ஏல விற்பனைகள்

## தேசிய அபிவிருத்தி வங்கி பீ.எல்.சீ.

## வத்தளைக் கிளையின் பகிரங்க ஏல விற்பனை

*1990 ஆம் ஆண்டின் 4 ஆம் இலக்க வங்கிகளினால் வழங்கப்பட்ட கடன்களை மீள அறவிடுதல் (விசேட ஏற்பாடுகள்) சட்டத்தின் 4 ஆம் பிரிவின் கீழான விற்பனை*

மிகவும் பெறுமதிமிக்க வசிப்பிடத்துக்கும் பயிர்ச்செய்கைக்கும் பொருத்தமான சொத்து

**கம்பஹா மாவட்டம், திவுலப்பிட்டிய பிரதேச சபை எல்லைக்குட்பட்ட அஸ்சென்னவத்த 204 கிராம அலுவலர் பரிவில் அஸ்சென்னவத்த கிராமத்தில் அமைந்துள்ள "பட்டதொம்பகஹவத்த , பட்டதொம்பகஹலந்த மற்றும் கடேவத்த" எனும் காணி உரிமம் பெற்ற நிலஅளவையாளர் G. K .N. திலக்கசிறி பெரேரா என்பவரினால் தயாரிக்கப்பட்ட 2015.08.25 ஆந் திகதியிடப்பட்ட T/ 2256 ஆம் இலக்க வரைபடத்தில் குறிக்கப்பட்ட பிரித்தெடுக்கப்பட்ட லொட் 02 எனும் காணியும் மற்றும் அதனுள்ளடங்கும் கட்டிடங்கள், தென்னை பயிர்ச்செய்கை மற்றும் சகலதுமாகும். இது 03 ஏக்கர் 01 றூட் 21.86 பேர்ச். பரப்பளவானது.**

**ஆதனத்தை வந்தடைதல்.-** தூனகஹவிலிருந்து மினுவாங்கொட பாதையில் சுமார் 03.5 கி.மீ. தூரம் சென்று தூனகஹ- பல்லபான பஸ் பாதைக்கு பிரவேசித்து இப்பாதையில் சுமார் 4 கி.மீ. தூரம் சென்றால் சுசந்த எனும் பெயரில் குளிர்சாதனம் பெட்டி மற்றும் குளிரூட்டி பழுது பார்க்கும் வேலைத்தளமொன்றை அடையலாம். சுசந்த எனும் பெயர்பலகையின் முன்னால் பாதையின் வலதுபக்கத்தில் இவ்வாதனம் அமைந்துள்ளது.

**இவ்வாதனம் வட்டினபஹவைச் சேர்ந்த மாபாபத்தி ரென்னஹெலாகே புத்திக உதய குமார மாபாபத்திரன என்பவர் கடப்பாடுடையவராகவும் திவுலப்பிட்டியவைச் சேர்ந்த சேனாரத்னகே நாலிகா சஜீவனி சேனாரத்ன கட்டுப்பாடுடையவராகவும், ஈட்டாளராகவும் வழங்கப்பட்ட கடன் வசதிகளுக்காக தேசிய அபிவிருத்தி வங்கி பீஎல்சீ இற்கு ஈடுவைக்கப்பட்ட ஆதனம்.**

**2018.01.16 ஆந் திகதி பி.ப. 2.30 மணிக்கு அதே இடத்தில் என்னால் பகிரங்க ஏலத்தில் விற்பனை செய்யப்படும்.**

**தீர்மானம் பற்றிய அறிவித்தலுக்கு.-** 2017.12.08ஆந் திகதிய அரசாங்க வர்த்தமானியையும் 2017.11.27 ஆந் திகதிய "திவயின", "த ஐலன்ட்" மற்றும் "தினக்குரல்" ஆகிய பத்திரிகை களையும் பார்க்கவும்.

**கொடுப்பனவு செய்யும் முறை.-** விற்பனை தீர்க்கப்பட்டவுடன் கொள்முதல் செய்தவர்களினால் கீழ்க் காணும் விதத்தில் கொடுப்பனவுகள் ரொக்கப் பணமாகச் செலுத்த வேண்டும்:-

(1) கொள்வனவு செய்யப்பட்ட விலையின் 10% (பத்து சதவீதம்) ;

(2) பிரதேச சபை வரி 1% (நூற்றுக்கு ஒன்று) ;

(3) ஏலவிற்பனையாளர் கட்டணம் விற்பனை விலையில் 2.5% (நூற்றுக்கு இரண்டரை சதவீதம்) ;

(4) சகல பகிரங்கப்படுத்தல் செலவு ;

(5) இலிகிதர் மற்றும் கூப்பிடுவோர் கட்டணம் 750 ரூபா;

(6) நொத்தாரிசுக் கட்டணமும் விற்பனை நிபந்தனை அத்தாட்சிப்படுத்தல் கட்டணமும் 2,500 ரூபா.

கொள்முதல் விலையின் மிகுதி 90% , இலங்கை அரசினால் அல்லது வேறு அதிகார சபையினால் விதிக்கப்படும் வேறு வரிகளும், தீர்வை வரி, விற்பனை வரி அல்லது வேறு கட்டணங்கள் ஏதாயினும் செலுத்தப்படவிருப்பின் அவற்றுடன் விற்பனை நாளிலிருந்து 30 நாட்களுக்குள் செலுத்தப்படல் வேண்டும்.

**உரித்தாதனம் மற்றும் விபரங்களுக்கு.-** முகாமையாளர், மையப்படுத்தல் (கடன் அறவிடுதல் ), தேசிய அபிவிருத்தி வங்கி பீஎல்சீ , இல. 40, நவம் மாவத்தை, கொழும்பு 2, தொலைபேசி 011-2448448 .

ஐ. டபிள்யூ. ஜயசூரிய,
நீதிமன்றங்கள் மற்றும் வர்த்தக
வங்கிகளினால் உத்தரவாதம்
பெற்ற ஏல விற்பனையாளர்.

இல.369/1,
துட்டுகெமுனு மாவத்தை,
லேவெல்ல பாதை,
மாவில்மட, கண்டி.
தொலைபேசி இல.: 081-2210595,071- 8446374, 071- 4962449.

12- 1020

---

## ஹற்றன் நஷனல் வங்கி பீஎல்சீ — கலேவெல கிளை

1990 ஆம் ஆண்டின் 4 ஆம் இலக்க வங்கிகளினால் வழங்கப்பட்ட கடன்களை மீள அறவிடுதல் (விசேட ஏற்பாடுகள்) சட்டத்தின் 4 ஆம் பிரிவின்கீழ் பகிரங்க ஏல விற்பனை

**மாத்தளை மாவட்டத்தில் மாத்தளை நகரத்தில் மாநகர சபை எல்லைக்குட்பட்ட கொடபொல கிராம அலுவலர் பிரிவில் கொன்காவெல கொடபொல பாதையில் அமைந்துள்ள ''புளியன்குழியேவத்த '' எனும் காணி உரிமம் பெற்ற நிலஅளவையாளர் M. இராஜசேகரன் என்பவரினால் தயாரிக்கப்பட்ட 2010.08.28 ஆம் திகதிய 7679 ஆம் இலக்க வரைபடத்தில் குறிக்கப்பட்ட பிரித்தெடுக்கப்பட்ட லொட் 1A என அடையாளமிடப்பட்ட காணித்துண்டும் அதனுள்ளடங்கும் கட்டிடங்கள், மரங்கள், பயிர்கள் மற்றும் சகலதுமாகும். இது 19 பேர்ச். பரப்பளவானது.**
**மேற்கூறிய வரைபடத்தில் பராமரிப்பு செய்தல் மற்றும் பாதை உரிமைக்காக அடையாளமிடப்பட்ட லொட் 03 எனும் பாதையை உபயோகிக்கும் உரிமையும் உண்டு.**

இவ்வாதனம் அசேன் அலியார் மொஹமட் ஹிஷாம் என்பவர் கடப்பாடுடையவராக வழங்கப்பட்ட கடன் வசதிகளுக்காக ஹற்றன் நஷனல் வங்கி பீஎல்சீ இற்கு ஈடுவைக்கப்பட்ட ஆதனம்.

**ஆதனத்தை வந்தடைதல்.-** மாத்தளை நகரத்தில் கண்டி பஸ் தரிப்பிடத்திலிருந்து சுமார் 0.5 கி.மீ. தூரம் ஒய பஹல பாதை சந்தி வரை வந்து ஒய பஹல பாதைக்கு பிரவேசித்து சுமார் 800 மீற்றர் தூரம் கொடபொல பாதை சந்தி வரை வந்து கொடபொல பாதைக்குத் திரும்பி அப்பாதையில் சுமார் 10 மீற்றர் தூரம் சென்றால் இப்பாதையில் இடதுபக்கத்தில் பாதையின் எல்லையில் இவ்வாதனம் அமைந்துள்ளது.

இவ்வாதனத்தை 2018 ஆம் ஆண்டு சனவரி மாதம் 19 ஆந் திகதி மு.ப. 10.30 மணிக்கு ஆதனம் அமைந்துள்ள அதே இடத்தில் என்னால் பகிரங்க ஏலத்தில் விற்பனை செய்யப்படும்.

**தீர்மானம் பற்றியஅறிவித்தலுக்காக.-** 2017.11.17 ஆந் திகதியுடைய அரசாங்க வர்த்தமானியையும், 2017.11.23 ஆந்திகதிய ''டெயிலி மிரர்'', ''லக்பிம'' மற்றும் ''தினக்குரல்'' ஆகிய பத்திரிகைகளையும் பார்க்கவும்.

**கொடுப்பனவு முறை.-** விற்பனை தீர்க்கப்பட்டவுடன் கொள்முதல் செய்தவரினால் கீழ்க்காணும் விதத்தில் கொடுப்பனவுகள் ரொக்கமாகச் செலுத்துதல் வேண்டும்:-

(1) கொள்முதல் விலையில் 10% (நூற்றுக்கு பத்து) ;
(2) பிரதேச சபை வரி 1 % ( நூற்றுக்கு ஒன்று);
(3) ஏல விற்பனையாளர் கட்டணம் விற்பனை விலையில் 2 1/2% (நூற்றுக்கு இரண்டரை) ;
(4) சகல பகிரங்கப்படுத்தல் செலவு ;
(5) இலிகிதர் மற்றும் கூவுவோர் கட்டணம் 750 ரூபா;
(6) நொத்தாரிஸ் கட்டணமும் விற்பனை நிபந்தனை அத்தாட்சிப்படுத்தல் கட்டணமும் 2,000 ரூபா.

கொள்முதலில் மிகுதி 90%மும், இலங்கை அரசினால் அல்லது வேறு அதிகார சபையினால் விதிக்கப்படும் வேறு வரிகளும், தீர்வை வரி, விற்பனை வரி அல்லது வேறு கட்டணங்கள் ஏதாயினும் செலுத்தப்பட இருப்பின் அவற்றுடன் விற்பனை நாளிலிருந்து 30 நாட்களுக்குள் செலுத்தப்படுதல் வேண்டும்.

**உரித்தாதனம் மற்றும் விபரங்களுக்கு:** ''சிரேஷ்ட முகாமையாளர், (வர்த்தக கடன் அறவிடுதல்) ஹற்றன் நஷனல் வங்கி பீ . எல். சீ. இல. 479, ரி. பி. ஜயா மாவத்தை, கொழும்பு 10.'' தொலைபேசி இல.: 011-2661835, 011- 2661836.

ஐ. டபிள்யூ. ஜயசூரிய,
நீதிமன்றங்கள் மற்றும் வர்த்தக
வங்கிகளினால் உத்தரவாதம் பெற்ற
ஏல விற்பனையாளர்.

இல. 369/1, துட்டுகெமுனு மாவத்தை,
லேவெல்ல வீதி,
மாவில்மடை,
கண்டி.

தொலைபேசி இல.: 081-2210595, 071- 8446374, 071- 4962449.

12- 1021

**தேசிய அபிவிருத்தி வங்கி பீ.எல்.சீ.- களுத்துறைக் கிளை**

*1990 ஆம் ஆண்டின் 4 ஆம் இலக்க வங்கிகளினால் வழங்கப்பட்ட கடன்களை மீள அறவிடுதல் (விசேட ஏற்பாடுகள்) சட்டத்தின் 4ஆம் பிரிவின் கீழான விற்பனை*

***1990 ஆம் ஆண்டின் 4 ஆம் இலக்க வங்கிகளினால் வழங்கப்பட்ட கடன்களை மீள அறவிடுதல் (விசேட ஏற்பாடுகள்) சட்டத்தின் 4 ஆம் பிரிவின் கீழ் தேசிய அபிவிருத்தி வங்கி பீஎல்சீ பணிப்பாளர் சபையினால் எனக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களின் பிரகாரம் தனது பதிவு அலுவலகம் ராஜகிரியவில் அமைந்துள்ள கம்பனிச் சட்டத்தின் கீழ் பதிவு செய்யப்பட்ட கம்பனியான எம்.ஆர்.எப். கார் கெயார் (பிறைவேட்) லிமிட்டட் கடப்பாடுடையதாகவும் மொஹமட் ரிஸ்வி பாருக் என்பவர் ஈட்டாளராகவும் வழங்கப்பட்ட கடன் வசதிகளுக்காக தேசிய அபிவிருத்தி வங்கி பீஎல்சீ இற்கு ஈடுவைக்கப்பட்ட கீழ் விபரிக்கப்படும் ஆதனங்கள் 2018, சனவரி மாதம் 16 ஆந் திகதி மு.ப. 11.00 மணிக்கு அதே இடத்தில் என்னால் பகிரங்க ஏலத்தில் விற்பனை செய்யப்படும்.***

*ஸ்ரீ ஜயவர்தனபுர கோட்டை நகர சபை எல்லைக்குட்பட்ட வெலிக்கடைக் கிராமத்தில் அமைந்துள்ள இஹல வெலிக்கடை பாதையில் அமைந்துள்ள தன்கஹகும்புர எனும் மஹவெலகும்புர எனும் காணி உரிமம்பெற்ற நிலஅளவையாளர் எம்.ஏ.எச். பண்டார என்பவரினால் தயாரிக்கப்பட்ட 2002.10.18 ஆந் திகதிய 1126 A ஆம் இலக்க வரைபடத்தில் குறிக்கப்பட்ட பிரித்தெடுக்கப்பட்ட லொட் 01B எனும் காணித்துண்டும் அதனுள்ளடங்கும் வரிப்பண இல. 210/1 மற்றும் 212 இஹல வெலிக்கடை பாதை, வெலிக்கடை எனும் முகவரியில் அமைந்துள்ள சொத்துக்களும் மரங்கள, பயிர்கள் மற்றும் சகலதுமாகும். இது 15.30.பேர்ச் பரப்பளவானது.*

***ஆதனத்தை வந்தடைதல்.-** ராஜகிரிய ஆயுர்வேத வைத்திசாலை சந்தியிலிருந்து ஒபேசேக்கரபுர பாதையில் சுமார் 01 கி.மீற்றர் தூரம் சென்றால் இப்பாதையின் எல்லையில் வலது பக்கத்தில் இவ்வாதனம் அமைந்துள்ளது.*

***தீர்மானம் பற்றிய அறிவித்தலுக்கு.-** 2017.06.09ஆந் திகதிய அரசாங்க வர்த்தமானியையும் 2017.07.15 ஆந் திகதிய "திவயின", "த ஐலண்ட்" மற்றும் "தினக்குரல்" பத்திரிகைகளையும் பார்க்கவும்.*

***கொடுப்பனவு செய்யும் முறை.-** விற்பனை தீர்க்கப்பட்டவுடன் கொள்முதல் செய்தவர்களினால் பின்வரும் தொகைகளை ரொக்கப் பணமாகச் செலுத்த வேண்டும்:-*

*(1) கொள்வனவு செய்யப்பட்ட விலையின் 10% (பத்து சதவீதம்) ;*

*(2) பிரதேச சபை வரி 1% (நூற்றுக்கு ஒன்று) ;*

*(3) ஏலவிற்பனையாளர் கட்டணம் விற்பனை விலையில் 2.5% (நூற்றுக்கு இரண்டரை சதவீதம்) ;*

*(4) சகல பகிரங்கப்படுத்தல் செலவு ;*

*(5) இலிகிதர் மற்றும் கூப்பிடுவோர் கட்டணம் 750 ரூபா;*

*(6) நொத்தாரிசுக் கட்டணமும் விற்பனை நிபந்தனை அத்தாட்சிப்படுத்தல் கட்டணமும் 2,500 ரூபா.*

*கொள்முதல் விலையின் மிகுதி 90% , இலங்கை அரசினால் அல்லது வேறு அதிகார சபையினால் விதிக்கப்படும் வேறு வரிகளும், தீர்வை வரி, விற்பனை வரி அல்லது வேறு கட்டணங்கள் ஏதாயினும் செலுத்தப்படவிருப்பின் அவற்றுடன் விற்பனை நாளிலிருந்து 30 நாட்களுக்குள் செலுத்தப்படல் வேண்டும்.*

***உரித்தாதனம் மற்றும் விபரங்களுக்கு.-** முகாமையாளர், ஒருமுகப்படுத்தல் ( கடன் அறவிடுதல்), தேசிய அபிவிருத்தி வங்கி பீஎல்சீ , இல. 40, நவம் மாவத்தை, கொழும்பு 2. தொலைபேசி: 011-2448448 .*

*'மேற்கூறிய ஏலவிற்பனை முன்னறிவித்தலின்றி நிறுத்தி வைக்கும் மற்றும் இரத்துச் செய்யும் முழு உரிமையும் வங்கிக்கு உண்டு'.*

*ஐ. டபிள்யூ. ஜயசூரிய,
நீதிமன்றங்கள் மற்றும் வர்த்தக வங்கிகளினால் உத்தரவாதம் பெற்ற ஏல விற்பனையாளர்.*

*இல.369/1,
துட்டுகெமுனு மாவத்தை,
லேவேல்ல பாதை,
மாவில்மட, கண்டி
தொலைபேசி : 071-4962449/071-8446374
தொலைபேசி/தொலைநகல் : 081-2210595*

*12- 1022*

---

**தேசிய அபிவிருத்தி வங்கி பீ.எல்.சீ.**

*1990 ஆம் ஆண்டின் 4 ஆம் இலக்க வங்கிகளினால் வழங்கப்பட்ட கடன்களை மீள அறவிடுதல் (விசேட ஏற்பாடுகள்) சட்டத்தின் 4 ஆம் பிரிவின் கீழான விற்பனை*

**களுத்துறைக் கிளையின் பகிரங்க ஏல விற்பனை**

***1990 ஆம் ஆண்டின் 4 ஆம் இலக்க வங்கிகளினால் வழங்கப்பட்ட கடன்களை மீள அறவிடுதல் (விசேட ஏற்பாடுகள்) சட்டத்தின் 4 ஆம் பிரிவின் கீழ் தேசிய அபிவிருத்தி வங்கி பீஎல்சீ பணிப்பாளர் சபையினால் எனக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களின் பிரகாரம் தனது பதிவு அலுவலகம் ராஜகிரியவில் அமைந்துள்ள கம்பனிச் சட்டத்தின் கீழ் பதிவு செய்யப்பட்ட கம்பனியான எம்.ஆர்.எப். கார் கெயார் (பிறைவேட்)***

**லிமிட்டட் கடப்பாடுடையதாக வழங்கப்பட்ட கடன் வசதிகளுக்காக கொழும்பைச் சேர்ந்த பிரசித்த நொத்தாரிசு திருமதி P.B.C. சமரசேன என்பவரினால் அத்தாட்சிப் படுத்தப்பட்ட 1306 ஆம் இலக்க முறி மூலம் தேசிய அபிவிருத்தி வங்கி பீஎல்சீ இற்கு ஈடுவைக்கப்பட்ட கீழ் விபரிக்கப்படும் ஆதனம்**

2018, சனவரி மாதம் 16 ஆந் திகதி மு.ப. 10.30 மணிக்கு அதே இடத்தில் என்னால் பகிரங்க ஏலத்தில் விற்பனை செய்யப்படும்.

தெல்கந்தக் காணிப்பதிவகத்தின் பதிவுப் பிரிவிற்குட்பட்ட ராஜகிரிய, ஒபேசேக்கரபுர, 210/1 எனும் இடத்தின் சூழலில் வைக்கப்பட்டுள்ள அல்லது களஞ்சியப் படுத்தியுள்ள வாகன உதிரிப்பாகங்கள் மற்றும் தொகைகள் உட்பட சகல வியாபாரத் தொகைகளும் மற்றும் உற்பத்தி முடிவுப் பொருட்களும் மற்றும் எல்லா விதமான அசையும் சொத்துக்களும் , கடன் பெற்றவரினால் காலத்திற்குக் காலம் கொண்டுவரப்படும் அல்லது மேற்கூறப்பட்ட சூழலில் களஞ்சியப்படுத்தியுள்ள அல்லது வைத்துள்ள சகல விதமான வியாபார தொகைகளும் ஆகும்.

**தீர்மானம் பற்றிய அறிவித்தலுக்கு**.- 2017.06.09ஆந் திகதிய அரசாங்க வர்த்தமானியையும் 2017.07.15 ஆந் திகதிய "திவயின", "த ஐலன்ட்" மற்றும் "தினக்குரல்" பத்திரிகைகளையும் பார்க்கவும்.

**கொடுப்பனவு செய்யும் முறை**.- விற்பனை தீர்க்கப்பட்டவுடன் கொள்முதல் செய்தவர்களினால் பின்வரும் தொகைகளை ரொக்கப் பணமாகச் செலுத்த வேண்டும்:-

(1) கொள்வனவு செய்யப்பட்ட விலையின் 10% (பத்து சதவீதம்) ;

(2) பிரதேச சபை வரி 1% (நூற்றுக்கு ஒன்று) ;

(3) ஏலவிற்பனையாளர் கட்டணம் விற்பனை விலையில் 2.5% (நூற்றுக்கு இரண்டரை சதவீதம்) ;

(4) சகல பகிரங்கப்படுத்தல் செலவு ;

(5) இலிகிதர் மற்றும் கூப்பிடுவோர் கட்டணம் 750 ரூபா;

(6) நொத்தாரிசுக் கட்டணமும் விற்பனை நிபந்தனை அத்தாட்சிப்படுத்தல் கட்டணமும் 2,500 ரூபா.

கொள்முதல் விலையின் மிகுதி 90% , இலங்கை அரசினால் அல்லது வேறு அதிகார சபையினால் விதிக்கப்படும் வேறு வரிகளும், தீர்வை வரி, விற்பனை வரி அல்லது வேறு கட்டணங்கள் ஏதாயினும் செலுத்தப்படவிருப்பின் அவற்றுடன் விற்பனை நாளிலிருந்து 30 நாட்களுக்குள் செலுத்தப்படல் வேண்டும்.

**உரித்தாதனம் மற்றும் விபரங்களுக்கு**.- முகாமையாளர், ஒருமுகப்படுத்தல் ( கடன் அறவிடுதல்), தேசிய அபிவிருத்தி வங்கி பீஎல்சீ , இல. 40, நவம் மாவத்தை, கொழும்பு 2. தொலைபேசி: 011-2448448 .

'மேற்கூறிய ஏலவிற்பனை முன்னறிவித்தலின்றி நிறுத்தி வைக்கும் மற்றும் இரத்துச் செய்யும் முழு உரிமையும் வங்கிக்கு உண்டு'.

ஐ. டபிள்யூ. ஜயசூரிய,
நீதிமன்றங்கள் மற்றும் வர்த்தக
வங்கிகளினால் உத்தரவாதம்
பெற்ற ஏல விற்பனையாளர்.

இல.369/1,
துட்டுகெமுனு மாவத்தை,
லேவேல்ல பாதை,
மாவில்மட, கண்டி.
தொலைபேசி : 071-4962449/071-8446374
தொலைபேசி/தொலைநகல் : 081-2210595

12- 1023

---

## தேசிய அபிவிருத்தி வங்கி பீஎல்சீ -களுத்துறைக் கிளை

*1990 ஆம் ஆண்டின் 4 ஆம் இலக்க வங்கிகளினால் வழங்கப்பட்ட கடன்களை மீள அறவிடுதல் (விசேட ஏற்பாடுகள்) சட்டத்தின் 4 ஆம் பிரிவின் கீழான விற்பனை*

1990 ஆம் ஆண்டின் 4 ஆம் இலக்க வங்கிகளினால் வழங்கப்பட்ட கடன்களை மீள அறவிடுதல் ( விசேடஏற்பாடுகள்) சட்டத்தின் 4 ஆம் பிரிவின் கீழ் தேசிய அபிவிருத்தி வங்கி பீஎல்சீ பணிப்பாளர் சபையினால் எனக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களின் பிரகாரம் தனது பதிவு அலுவலகம் ராஜகிரியவில் அமைந்துள்ள கம்பனிச் சட்டத்தின் கீழ் பதிவு செய்யப்பட்ட கம்பனியான எம்.ஆர். எப். கார் கெயார் (பிறைவேட்) லிமிட்டட் கடப்பாடுடையதாக வழங்கப்பட்ட கடன் வசதிகளுக்காக 668, 705 மற்றும் 1305 ஆம் இலக்க முறிகளினால் தேசிய அபிவிருத்தி வங்கி பீஎல்சீ இற்கு ஈடுவைக்கப்பட்ட கீழ் விபரிக்கப்படும் ஆதனங்கள் அமைந்துள்ள அதே இடத்தில்

2018, சனவரி மாதம் 16 ஆந் திகதி மு.ப. 10.45 மணிக்கு அதே இடத்தில் என்னால் பகிரங்க ஏலத்தில் விற்பனை செய்யப்படும்.

## மேலே குறிப்பீடு செய்யப்பட்ட ஈடுவைக்கப்பட்ட ஆதனத்தின் விவரணம்

*கீழே விவரிக்கப்பட்டவையும் தெல்கந்தக் காணிப்பதிவகத்தின் பதிவுப்பிரிவினுள் ராஜகிரிய, ஒபேசேக்கரபுர, 210/1 ஆம் இலக்கத்தில் அமைந்துள்ள வளவுகளில் அல்லது அவற்றின்மீது வைத்திருக்கப்பட வேண்டியவையுமான ஈடுவைக்கப்பட்ட அசைவுள்ளவை எல்லாம் மற்றும் அவை தனித்தனியாகவும்.*

| விவரணம் | கூறுகளின் எண்ணிக்கை | வகை/மாதிரி உற்பத்தியாண்டு | தெரிவுசெய்யப்பட்ட வழங்குநர் |
|---|---|---|---|
| ஸ்குறூ ஒட்டோ உயர்த்தி (2 கம்பம்) புத்தம்புதியது | 3 | ELGI/MT 04 030 | என்எவ் ட்ரேடிங் (பிறைவேட்) லிமிட்டட் |
| பேய்ன்ட் பூத் புத்தம்புதியது | 1 | PHOENIX 6.75 M இந்தியா | எல்ஜி இகுவிப்மென்ட்ஸ் (பிறைவேட்) லிமிட்டட் |
| என்ஜின் பகுப்பாய்வுக்கருவி புத்தம் புதியது | 1 | LAUNCH X - 431 MASTER | ஸ்பார்க் ரெக்னோ லொஜீஸ் |
| ஈரமான, உலர்ந்த வக்கூம் கிளீனர் புத்தம்புதியது | 2 | NT 65/2 சீனா | என்பீஎஸ் இகுவிப்மென்ட்ஸ் (பிறைவேட்) லிமிட்டட் |
| சுப்பர் ஸ்பிரே எக்ஸ்ட்ரக்ஷன் கிளீனர் புத்தம்புதியது | 1 | Puzzy - 100 | என்பீஎஸ் இகுவிப்மென்ட்ஸ் (பிறைவேட்) லிமிட்டட் |
| உயர் அமுத்தப்பொறி புத்தம்புதியது | 2 | HD 10/25 | டபிள்யூ. புஞ்சிபண்டா அன்ட் சன்ஸ் (பிறைவேட்) லிமிட்டட் |
| சென்ரிக் டைப் பம்பிங் கூறு புத்தம்புதியது | 3 | VMS 100/7.5 | ஜினசேன (பிறைவேட்) லிமிட்டட் |
| டூல் கபினெட் | 1 | - | மக் டூல்ஸ் ரெக் 1000 |

காற்றுச் சீராக்கற் சாதனம்

| | |
|---|---|
| 1. வக்கூம் பம்பி | இத்தாலிய - அளூ |
| 2. கேஜ் செட் | இத்தாலிய - ஹொரங்சன் |
| 3. ஒட்சிசன் வெல்டிங் முழுசெட் | இந்தியா - ஷூமார்க் |
| 4. நைற்றோஜன் சிலின்டர் | இந்தியா - சிலோன் ஒட்சிசன் |
| 5. மனிபோல்ட் கேஜ் செட் | ஸ்பானிய - அளூ |
| 6. ஹவுஸ் ட்ரிமிங் கிட் | இத்தாலிய - ஹொரங்சன் |
| 7. டைனடிக் 200 AMP இன்வேர்ட்டர் | இந்தாலி |

கருவிகளின் விவரணம் - (வழங்குநர்) குளோரி கருவிகளும் சாதனங்களும்

| தொகை | விவரணம் |
|---|---|
| 10 | அம்ப்டன் இன திறந்த ஸ்பனர் |
| 10 | 8 மிமீ டீப் சொக்கட் |
| 10 | 10 மிமீ டீப் சொக்கட் |
| 10 | 12 மிமீ டீப் சொக்கட் |
| 10 | செட் 105 * 10 மிமீ அலன்கீ ஸ்ரான்லி |
| 10 | செட் 1/16* 3/8 அலன்கீ ஸ்ரான்லி |
| 10 | செட் ஸ்கிரீகோ ட்ரைவர் செட் 6 துண்டுகள் |

| தொகை | விவரணம் |
|---|---|
| 10 | ஸ்ரான்லி 10 மிமீ டட் |
| 10 | செட் இரட்டைத் திறந்தமுனை ரென்ச் 8 துண்டுகள் 6 –24 |
| 10 | செட் இணைப்பு ஸ்பனர் 8 – 32 மிமீ 14 துண்டுகள் |
| 10 | செட் இரட்டை/ஓப்செட் ரிங் ஸ்பனர் 6 – 22 8 துண்டுகள் |
| 10 | 10" அஜஸ்டசல் ரென்ச் |
| 10 | 12" அஜஸ்டசல் ரென்ச் |
| 10 | செட் பெட்டி சொக்கட் 10 – 24 மிமீ 10 துண்டுகள் |
| 10 | 1 1/2 LBS போல் – பின் சுத்தியல் |
| 10 | 2 1/2 LBS போல் – பின் சுத்தியல் |
| 10 | 6" ஸ்ரான்லி டயகனல் முனை வெட்டும் ப்ளையர் |
| 10 | 7" நீண்டமூக்கு ப்ளையர் |
| 10 | 8" இணைப்பு ப்ளையர்கள் |
| 10 | சேர்கிளிப் ப்ளையர் உட்புற |
| 10 | சேர்கிளிப் ப்ளையர் வெளிப்புற |
| 10 | 125 மிமீ ரிஸ்டன் ரிங் கருவி |
| 5 | காந்தமுறைக் கருவி எலோரா |
| 10 | 7மிமீ * 9மிமீ அலன் கீ |
| 10 | 8" *1" அரைக்கும் சில்லு/இந்தியா |
| 10 | எண்ணெய்க் கொள்கலன் இந்தியா |
| 10 | 10" *12" கட் ரென்ச் |
| 5 | செட் 28 துண்டுகள் பெட்டிசொக்கட் 10 – 32 மிமீ |
| 3 | T83002 3 தொன் ட்ரொலி ஜக் ஹெவி டியூட்டி |
| 1 | T46001 C6T ஜக் ஸ்டான்ட் வித் சேப்டி பின் |
| 10 | T70401 4 தொன் ஹைதரோலிக் பொடி ரிபாய்ர் கிட் |
| 10 | A/C மேயன்டனன்ஸ் சேர்கிளிப் ப்ளையர் இனர் |
| 10 | A/C கடதாசி வெட்டும் கத்தி |
| 10 | A/C மேய்ன்டனன்ஸ் S/ட்ரைவர் பிளேவ் 5 மிமீ * 125 மிமீ |
| 10 | A/C மேய்ன்டனன்ஸ் S/ட்ரைவர் பிளேவ் 3 மிமீ * 200 மிமீ |
| 10 | A/C மேய்ன்டனன்ஸ் பொயின்ட்டுல் 6 மிமீ * 150 மிமீ |
| 10 | A/C மேய்ன்டனன்ஸ் பொயின்ட்டுல் 3 மிமீ * 200 மிமீ |
| 10 | A/C மேய்ன்டனன்ஸ் பொயின்ட்டுல் பிளேட் 6" |
| 1 | 5" பென்ச் வைஸ் |
| 10 | இல. 10 பேர்மாயோ லொக்கிங் ப்ளையர் |
| 10 | செட் 8 துண்டுகள் இரட்டை ஓவ்செட் ரிங் 6 – 22 மிமீ |
| 10 | இல. 18 துண்டுகள் வைக்கிங் ஹக்சோ பிளேட் |
| 10 | செட் 12 துண்டுகள் ஊசி வயில்ஸ் |
| 10 | 2 1/2 LBS போல் பின் சுத்தியல் |
| 10 | ட்ரகன் வெட்டும் ப்ளையர் 8" அமெரிக்கன் வகை |

***தீர்மானம் பற்றிய அறிவித்தலுக்கு.***– 2017.06.09ஆந் திகதிய அரசாங்க வர்த்தமானியையும் 2017.07.15 ஆந் திகதிய "திவயின", "த ஜலன்ட்" மற்றும் "தினக்குரல்" பத்திரிகைகளையும் பார்க்கவும்.

***கொடுப்பனவு செய்யும் முறை.***– விற்பனை தீர்க்கப்பட்டவுடன் கொள்முதல் செய்தவர்களினால் பின்வரும் தொகைகளை ரொக்கப் பணமாகச் செலுத்த வேண்டும்:–

(1) கொள்வனவு செய்யப்பட்ட விலையின் 10% (பத்து சதவீதம்) ;

(2) பிரதேச சபை வரி 1% (நூற்றுக்கு ஒன்று) ;

(3) ஏலவிற்பனையாளர் கட்டணம் விற்பனை விலையில் 2.5% (நூற்றுக்கு இரண்டரை சதவீதம்) ;

(4) சகல பகிரங்கப்படுத்தல் செலவு ;

(5) இலிகிதர் மற்றும் கூப்பிடுவோர் கட்டணம் 750 ரூபா;

(6) நொத்தாரிசுக் கட்டணமும் விற்பனை நிபந்தனை அத்தாட்சிப்படுத்தல் கட்டணமும் 2,500 ரூபா.

கொள்முதல் விலையின் மிகுதி 90% , இலங்கை அரசினால் அல்லது வேறு அதிகார சபையினால் விதிக்கப்படும் வேறு வரிகளும், தீர்வை வரி, விற்பனை வரி அல்லது வேறு கட்டணங்கள் ஏதாயினும் செலுத்தப்படவிருப்பின் அவற்றுடன் விற்பனை நாளிலிருந்து 30 நாட்களுக்குள் செலுத்தப்படல் வேண்டும்

'மேற்கூறிய ஏலவிற்பனை முன்னறிவித்தலின்றி நிறுத்தி வைக்கும் மற்றும் இரத்துச் செய்யும் முழு உரிமையும் வங்கிக்கு உண்டு'.

**உரித்தாதனம் மற்றும் விபரங்களுக்கு.**-முகாமையாளர், ஒருமுகப்படுத்தல் ( கடன் அறவிடுதல்), தேசிய அபிவிருத்தி வங்கி பீஎல்சீ, இல. 40, நவம் மாவத்தை, கொழும்பு 2. தொலைபேசி: 011-2448448 .

ஐ. டபிள்யூ. ஜயசூரிய,
நீதிமன்றங்கள் மற்றும் வர்த்தக
வங்கிகளினால் உத்தரவாதம்
பெற்ற ஏல விற்பனையாளர்.

இல.369/1,
துட்டுகெமுனு மாவத்தை,
லேவேல்ல பாதை,
மாவில்மட, கண்டி
தொலைபேசி : 071-4962449/071-8446374/
தொலைபேசி/தொலைநகல் : 081-2210595

12- 1024

---

**டீஎப்சீசீ வங்கி பீஎல்சீ**

(டீஎப் சீ சீ வர்தன வங்கி பீஎல்சீ யின் பதிலாள்)

1990 ஆம் ஆண்டின் 4 ஆம் இலக்க வங்கிகளினால் வழங்கப்பட்ட கடன்களை மீள அறவிடுதல் (விசேட ஏற்பாடுகள்) சட்டத்தின் 8 ஆம் பிரிவின் கீழான விற்பனை

**பெறுமதிமிக்க சொத்து ஏல விற்பனை**

**விற்பனை 1**

**769, 979/182/129 மற்றும் 1010/1058/323 ஆம் இலக்க பிணை உறுதிகள் மூலம் அடகுவைக்கப்பட்ட உடைமையின் விபரம்.**-

**மேல் மாகாணம்,கம்பஹா மாவட்டம், சியனே கோரளே, அதிகாரி பற்று களனி பிரதேச சபையின் களனி உப அலுவலக எல்லைக்கு உட்பட்ட நுண்கழுகொட கிராமத்தில் அமைந்துள்ள, அனுமதிபத்திரம் பெற்ற நிலஅளவையாளர் ஆர். யூ. விஜேதுங்க அவர்களால் வரையப்படட் 2006 ஆம் ஆண்டு செத்தெம்பர் மாதம் 24 ஆந் திகதியிடப்பட்ட 8997/2006 ஆம் இலக்க வரைபடத்தில் துண்டு O வில் துண்டு 01 எனக் குறிக்கப்பட்ட இல. 10 மற்றும் 12 பாசிஹேன மாவத்தை என்ற முகவரியைக் கொண்ட தியபொரகஹவத்த, அட்டம் பகஹவத்த , ஹக்குருகெமுனெனிய அல்லது தெல்கஹலந்தே மில்லகஹவத்த மற்றும் மாகாவிட்டகே கிறிஸ்டலன் பெரேரா விதானேராலகேவத்த மற்றும் நதுன்கஹவத்த என அழைக்கப்படும் காணித்துண்டு .**

**காணியின் விஸ்தீரணம் (00ஏ. 0றூ.38.78பே.) ( முப்பத்தெட்டு தசம் ஏழு எட்டு பேர்ச்சஸ்கள்) மேலே கூறப்பட்ட 8997/2006 ஆம் இலக்க வரைபடத்திற்கு அமைய அங்குள்ள மண், மரங்கள், தோட்டங்கள் மற்றும் அதிலுள்ள அனைத்தும் அடங்கலாக. கொழும்பு காணிப்பதிவகத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.**

**விற்பனை 2**

**526 ஆம் இலக்க பிணை உறுதி மூலம் அடகுவைக்கப்பட்ட உடைமையின் விபரம்.**-

**மேல் மாகாணம்,கம்பஹா மாவட்டம், மேற்கு சியனே கோரளே, அதிகாரி பற்று களனி நிர்வாக மாவட்டத்தின் களனி பிரதேச சபையின் வெதமுல்ல இல. 261 கிராம அலுவலர் பிரிவில்**

